பகவந்தன் கூறுகிறார்: ஸத்யலோகாதிபதியான பிரம்மனின் மகனே, உன் உத்தமமான கேள்விகளுக்கு நான் மிகவும் மகிழ்ச்சியுடன் பதில் அளிக்கிறேன். முனிவரனே, கவனத்துடன் கேட்பாயாக.

**நாரத3 ஸ்ரீஸத்ய நாராயண வ்ரத**
**தா4ருணியொளகி3ன ஜனரு |**
**ஆரு தம்ம பரிவாரதி3ந்த3லி கெ3ய்யெ**
**பூ4ரிஸௌக்2யதி3 மெரெயுவரு ||18**

நாரதனே, பூமியில் இருப்பவர்களான மக்கள், ஸ்ரீஸத்ய நாராயண விரதத்தை, யார் தம்முடைய குடும்பத்தினருடன் செய்கிறார்களோ, அவர்கள் அந்த பூமியில் பரம ஸௌக்யத்துடன் சஞ்சரிப்பார்கள்.

**தே3வனெ ஈ நின்ன ஸேவகனிகெ3 ஸத்ய?? நின்ன**
**தே3வனவ்ரதத3 விதா4னவன்னு**
**ஸாவதா4னதி3 பேளு பா4வஜபித ஏகோ**
**பா4வதி3 கேளுவெ முன்ன ||19**

நாரதர் கேட்கிறார்: ஸ்வாமியே, உன்னுடைய இந்த சேவகனுக்கு நீ இதனை சொல்வாயாக. இந்த விரதத்தின் விதானத்தை விளக்கமாகச் சொல். பிரம்மனின் தந்தையே, நீ சொல்வதை, நான் ஒருமனதுடன் கேட்பேன்.

**பு3த4னுத நாரத3 க்4ருத க்ஷீர ஷர்கர**
**கத3ளி கோ3தூ4மாதி3க3ளனு |**
**பது3ளதி3ந்த3லி ஸுபாககெ3ய்து மேண்**
**வித4வித4 பக்வாதி3க3ளனு ||20**

அறிஞர்களால் வணங்கப்படும் நாரதனே - தயிர், பால், சர்க்கரை, வாழைப்பழம், கோதுமை ஆகிய பதார்த்தங்களை சேர்த்து பிரஸாதங்களை செய்து, விதம்விதமான பதார்த்தங்களை தயார் செய்து..

**பரமப$^{4}$க்தியலிந்த$^{3}$ பரிவார ஸஹிததி$^{3}$**
**த$^{4}$ரணிஸுரன பரிமுக$^{2}$தி$^{3}$ |**
**துருதூ$^{4}$ளிகாலதி$^{3}$ பரிபரிபூஜிஸி**
**ஹரிக$^{3}$ர்ப்பிஸலி பே$^{3}$கு முத$^{3}$தி$^{3}$ ||21**

மிகவும் பக்தியுடன் தன்னுடைய குடும்பத்துடன் கோதூளி காலத்தில் (விடியலில் அல்லது மாலையில்), உலகநாயகனை விதம்விதமாக பூஜித்து, அதனை அவனுக்கே, மிகவும் மகிழ்ச்சியுடன் அர்ப்பிக்க வேண்டும்.

**ஈ ரீதிகெ$^{3}$ய்வர கோரிகெயனு த$^{3}$யா**
**வாரிதி$^{4}$ ஶ்யாமஸுந்த$^{3}$ரனு**
**பூரெயிஸி ப்ரதி நித்ய வாரிஜஸஹிததி$^{3}$**
**ஸேரி தா நலிதா$^{3}$டு$^{3}$திஹனு ||22**

இவ்வாறாக செய்பவர்களின் வேண்டுதல்களை நிறைவேற்றி, கருணைக்கடலான ஶ்யாம ஸுந்தரன், அவர்களின் வீடுகளில், தன்னுடைய நியத பத்னியான மகாலட்சுமிதேவியுடன் எப்போதும் நிலைத்திருந்து அவர்களை அருள்வான்.

**|| இதி ஸ்ரீஸத்ய நாராயண கதா ப்ரதமோத்யாய: ||**

***

## 2ம் அத்தியாயம்

**அதிமோத$^{3}$தி$^{3}$ந்த$^{3}$லி மதியுதரெ ஈக$^{3}$**
**ப்ருத$^{2}$வியொளகெ$^{3}$ பூர்வத$^{3}$லி |**
**வ்ரதகெ$^{3}$ய்த$^{3}$ ஸுகு$^{3}$ணர இஹிஹாஸ நிம்மகெ$^{3}$**
**கதி$^{2}$ஸுவெ ஹிததி$^{3}$ந்த$^{3}$ கேளி ||1**

ஸூதர் கூறுகிறார் - கற்றறிந்த அறிஞர்களே. இந்த பூமியில் முன்னர் இந்த விரதத்தினை செய்த ஸுகுணர்களின் கதைகளை உங்களுக்கு மகிழ்ச்சியுடன் கூறுகிறேன். இதனை கவனத்துடன் கேளுங்கள்.

**காஶியொ கெ3 ஒப்3ப3 பூ4ஸூர ப3ட3தன**
**க்லேஶதி3 வாஸிஸுத3னு |**
**ஸ்ரீஶ அவன நோடி3 போஷிஸலு வ்ருத்3த4**
**வேஷதி3 மாதனாடி3ஸித3னு ||2**

காசியில் ஒரு பிராமணன், மிகவும் ஏழ்மையில் வாழ்ந்து கொண்டிருந்தான். பகவந்தன் அவன் மேல் கருணை கொண்டு, ஒரு முதியவரின் வேடத்தில் வந்து அவனிடம் பேசினார்.

**பா3 தவகதி3 விப்ரநாத2னெ தவமுக2**
**பாதோ2ஜ பா3டி3த3 ப3கெ3யா |**
**ஈதெர து3க்க2தி3 நீ திருகு3வந்த2**
**மாது ப்ரீதிலி பேளய்யா ||3**

பிராமண ஸ்ரேஷ்டனே, உன் முகம் இவ்வாறு வாடியிருப்பது ஏன் என்றும், இவ்வாறு துக்கத்துடன் நீ சுற்றிக் கொண்டிருப்பது ஏன் என்பதை எனக்கு சொல்வாயா?

**கதி2ஸுவெ ஹேவிப்ர ஹிததி3ந்த3 நீ என்ன**
**ஸ்தி2திய லாலிஸு மனதி3ந்த3 |**
**க3திகெ3ட்டு சரிசுவ ப்ருதி2வியொளகெ3 ஈக3**
**அதிப3ட3தன தெ3ஸெயிந்த3 ||4**

ஹே அறிஞனே, என் நிலையை சொல்கிறேன், நீ உன் மனதில் அதனைப் பற்றி சிந்திப்பாயாக. இந்த பூமியில் நான் இப்போது எந்த கதியும் இன்றி சுற்றிக் கொண்டிருக்கிறேன். மிகவும் ஏழ்மையிலும் வாடுகிறேன்.

**ஶ்ரேஷ்டனெ தா3ரித்3ர்ய கஷ்டதொலகு3வந்த2**
**த2ட்டனே நீ பேளுபாய |**
**க4ட்யாகி3 நின்ன உத்க்ருஷ்ட பாதா3ம்பு3ஜ**
**முட்டி ஸேவிபெ மஹாராயா ||5**

சிறந்தவனே, என்னுடைய இந்த ஏழ்மை, கஷ்டங்கள் தொலையும் உபாயத்தை நீ உடனடியாக எனக்குக் கூறுவாயாக. நான்

உன்னுடைய திவ்ய பாதங்களை கெட்டியாக பிடித்துக் கொண்டு வணங்குவேன், மகாராயா.

**மிடுகு$^{3}$த்த விப்ரனு நுடி$^{3}$த$^{3}$ மாதனு கேளி**
**கட$^{3}$லஜபதி கவிகே$^{3}$யா |**
**கடு$^{3}$த$^{3}$யத$^{3}$லி பேள்த$^{3}$ ப$^{3}$ட$^{3}$தன களெயுவ**
**பொட$^{3}$வியொளித்$^{3}$த$^{3}$ உபாயா ||6**

மிகக் கவலையுடன் அந்த பிராமணன் கூறிய பேச்சுகளை கேட்டு, பாற்கடலில் படுத்திருப்பவனான, கவிஞர்களால் போற்றப்படுபவனான ஸ்ரீஹரி, மிகவும் கருணையுடன், அவனின் ஏழ்மையை போக்குவதான, பூமியில் இருக்கும் ஒரு உபாயத்தை கூறினான்.

**ஸாருவெ கேளய்யா மாரஜனக நிஜ**
**நாராயணன ஸுவ்ரதவா |**
**ஆரு ஜக$^{3}$தி$^{3}$ ப$^{4}$க்திபூர்வக மாள்பரு**
**தா$^{3}$ரித்$^{3}$ர்ய ஹரி தொ$^{3}$ரகெ$^{3}$ய்வா ||7**

மன்மதனின் தந்தையான, நாராயணனின் விரதத்தைப் பற்றி நான் சொல்கிறேன், கேள். யார் இதனை பக்தியுடன் செய்கிறார்களோ, அவர்களுடைய ஏழ்மையை ஸ்ரீஹரி போக்குகிறான்.

**முது$^{3}$கன நுடி$^{3}$ கேளி முத$^{3}$மனதி$^{3}$ந்த$^{3}$லி**
**ஸத$^{3}$னக்கெ த்$^{3}$விஜ ப$^{3}$ந்து$^{3}$ தானு |**
**ஸுத$^{3}$தி ஸஹிதனாகி$^{3}$ ஸத்யநாத$^{2}$ன பூஜெ**
**வித$^{4}$வித$^{4}$த$^{3}$லி மாடி$^{3}$த$^{3}$னு ||8**

இவ்வாறாக அந்த முதியவரின் (ஸ்ரீஹரியின்) பேச்சினைக் கேட்டு, அந்த பிராமணன், தன் வீட்டிற்கு திரும்பி வந்து, தன் மனைவியுடன் ஸ்ரீஸத்ய நாராயண பூஜையை மிகவும் ஸம்ப்ரமமாக செய்தான்.

**ஹருஷதி$^{3}$ ஈரீதி த$^{4}$ரணிதே$^{3}$வனு மாடெ$^{3}$**
**ஶிரிஸதி ஸுதரிந்த$^{3}$ தானு |**

**த4ரெயொளு ஸுக2ப3ட்டு பரமது3ர்லப4வாத3**
**ஹரிபுரபத2 ஹிடி3த3னு ||9**

இவ்வாறாக அந்த பிராமணன் இந்த விரதத்தினை மகிழ்ச்சியுடன் செய்ய, தன் மனைவி, மக்கள் ஆகியோருடன் பூமியில் சுகமாக இருந்து, பின்னர் மிகவும் அபூர்வமான மோட்ச மார்க்கத்தையும் பிடித்தான்.

**ஸூதரெ அத்யந்த கௌதுகவாகி3ஹ**
**தா4தபிதன ஈ வ்ரதவு |**
**பூ4தளதொ3ளகெ3ந்து3 க்2யாதிய பொந்தி3து**
**ப்ரீதிலி பேளிரி நீவு ||10**

ஸூத முனிவரே. மிகவும் வைபவமான, பிரம்மனின் தந்தையான விஷ்ணுவின் இந்த விரதம், பூமியில் எப்போது அதிக புகழினை பெற்றது என்பதை அன்புடன் எங்களுக்கு சொல்லுங்கள் என்று ஸௌனகாதிகள் கேட்கின்றனர்.

**ப்ரதிமாஸத3லி ஆ ப்ருதி2விதே3வனு தன்ன**
**ஸதிஸுத பரிவாரஸஹிதா |**
**அதிஹிதத3லி மனோரத2 பூரெயிஸுவ ஈ**
**வ்ரத மாடு3திரலாக3 த்வரித ||11**

அந்த பிராமணன், ஒவ்வொரு மாதமும், தன்னுடைய மனைவி, மக்கள், குடும்பத்தினருடன் மிகவும் வைபவத்துடன், அனைவரின் மனோரதங்களை நிறைவேற்றும் இந்த விரதத்தை செய்து கொண்டு வருகையில்...

**சரணஜனோர்வனு ஷிரதி3 காஷ்டபா4ர**
**த4ரிஸி மாரலு பீ3தி3க3ளல்லி |**
**ப3ருதிரெ மார்க்க3தி3 த4ரணிதே3வன மன்**
**தி3ரகண்டு3 பரமமோத3த3லி ||12**

வழிப்போக்கன் ஒருவன் தன் தலையில் பாரமான விறகுக்கட்டைகளை தூக்கிக்கொண்டு, அதனை விற்பதற்காக

தெருக்களில் வந்து கொண்டிருந்தான். வழியில் இந்த பிராமணனின் வீட்டினைக் கண்டு மிகவும் மகிழ்ச்சியுடன்...

**ஸ்ரீநிவாஸன க4னத்4யானதி3ந்த3ர்ச்சிப**
**க்ஷோணிஸூரன நோடி3 ஜவதி3**
**ஆனந்த3த3லி ஶூத்3ரமானவ கேளித3**
**ஏனிதெ3ந்தெ3னுதலாக்ஷணதி3 ||13**

அங்கு அந்த பிராமணன், தியானத்தில் ஈடுபட்டு, ஸ்ரீநிவாஸனை அர்ச்சிக்கும் விதத்தை பார்த்து, மகிழ்ச்சியுடன், இது என்ன விரதம் என்று கேட்டான்.

**ஶூத்3ரன நுடி3 கேளி ஆத்3விஜபேள்த3னு**
**ப4த்3ரத3 வ்ரதத3 விவரவா |**
**ஶூத்3த4மனதி3 சரணோத்ப4வகெ3ய்த3னி**
**ருத்3த4ன பாதா3ர்ச்சனவ ||14**

நான்காம் வர்ணத்தவனான அவனின் கேள்விக்கு, அந்த பிராமணன், அந்த அற்புத விரதத்தின் விவரங்களை கூறினான். அந்த வழிப்போக்கனும் மிகவும் சுத்தமான மனதுடன், ஸ்ரீமன் நாராயணனின், அனிருத்தனின் பாத அர்ச்சனையை...

**ஹருஷதி3ந்த3லி ஸத்யஹரிபூஜிஸித3 ஶூத்3ர**
**பரமஸௌக்2யதி3 இத்3து3 கொனெகெ3 |**
**பரிவாரயுதனாகி3 தெரளித3 ஸ்தி2ரவுள்ள**
**ஶிரிஶ்யாம ஸூந்த3ரன புரிகெ3 ||15**

மிகவும் மகிழ்ச்சியுடன் ஸத்ய நாராயண பூஜையை செய்தான். இவ்வாறு அவன் செய்ததால், மிகவும் நலனுடன் இந்த பூமியில் இருந்து, கடைசியில், தன் குடும்பத்துடன், ஸ்ரீஶ்யாம சுந்தரனின் புரியான வைகுண்டத்திற்கு (மோட்சத்திற்கு) சென்றான்.

### || இதி ஸ்ரீஸத்ய நாராயண கதா த்வித்திய அத்யாய: ||

***

## 3ம் அத்தியாயம்

**ரிஷிஜனக[3]ளே கேளி வஸுதி[4]த்ரயதி[3] க[4]ன**
**பெ[1]ஸராத[3] இன்னொந்து[3] கதெ[2]யா |**
**உஸூருவெ கேள்வர வ்யஸனவு பரிஹார**
**புஶியல்ல ஈ நுடி[3] க[2]ரியா ||1**

ஸௌனகாதி ரிஷிகளே, மூன்று உலகங்களிலும் அபாரமான புகழ்பெற்ற இன்னொரு கதையை நான் சொல்கிறேன் கேளுங்கள். இதனை கேட்பவர்களின் பிரச்னைகள் கண்டிப்பாக தீர்கின்றன. இந்த வாக்கு உண்மையே. இதில் சிறிதும் சந்தேகம் இல்லை.

**வர உல்கமுக[2]னெம்ப[3] த[4]ரணீஶனோர்வனு**
**ஹருஷதி[3]ந்த[3]லி தன்ன ஹிததா[3] |**
**தருணியிந்தொ[3]டகூ[3]டி[3] ஶரதி[4]தீரதி[3] நிஜ**
**ஹரியன்ன பூஜிஸுதிர்த்த[3] ||2**

உல்கமுக என்னும் சிறந்த அரசன் ஒருவன், தன் அன்பு மனைவியுடன் சேர்ந்து, ஒரு நதிக்கரையில், மிகவும் மகிழ்ச்சியுடன், ஸ்ரீஹரியின் பூஜையை செய்து கொண்டிருந்தான்.

**க்ஷோணிபாலகனித்[3]த[3] ஆ நதி[3] தீரதி[3]**
**வாணிஜ்ய மது[4] நாமகனு |**
**ஸானுராக[3]தி[3] ப[3]ந்து[3] ஸ்ரீ நிதி[4] வ்ரதத[3] வி**
**தா[4]னவேனெந்து[3] கேளித[3]னு ||3**

அரசன் பூஜை செய்து கொண்டிருந்த அந்த நதி தீரத்திற்கு, மது என்னும் பெயர் கொண்ட வணிகன் ஒருவன் வந்து, இந்த ஸ்ரீஸத்ய நாராயண விரதத்தின் விதானம் என்ன என்று கேட்டான்.

**பூ[4]மிபாலக மது[4] நாமகவைஶ்யன**
**ஆ ம்ருது[3] நுடி[3] கேளி ஜவதி[3] |**
**காமித ஸத்யஸ்வாமிய வ்ரததா[3]**
**நேமவ பேள்த[3] ஸம்மத[3]தி[3] ||4**

அரசன், அந்த மது நாமக வணிகனின் கேள்விக்கு பதிலாக, அனைத்து இஷ்டார்த்தங்களையும் நிறைவேற்றுவதான, இந்த ஸ்ரீஸத்ய நாராயண ஸ்வாமியின் விரதத்தின் நியமத்தினைப் பற்றி கூறினான்.

**ரக்கஸாரிய கதா$^{2}$ ப$^{4}$க்திலி கேளுத**
**லக்குமியுத முத$^{3}$தி$^{3}$ந்த$^{3}$ |**
**மக்களெனகா$^{3}$க$^{3}$லு சக்ரிய ஸுவ்ரத**
**அக்கரத$^{3}$லி மாள்பெனெந்த$^{3}$ ||5**

அசுரர்களை கொல்பவனான ஸ்ரீஹரியின் கதையினை பக்தியுடன் கேட்டு, அந்த வணிகன், எனக்கு மக்கள் ஆகவேண்டும். அந்த நோக்கத்துடன் இந்த விரதத்தினை நான் அக்கறையுடன் செய்வேன் என்று மகிழ்ச்சியுடன் கூறினான்.

**ஈரீதி த்$^{4}$ருட$^{3}$ வ்யாபாரியு தா கெ$^{3}$ய்து$^{3}$**
**ஶௌரி ப்ரஸாத$^{3}$ ஸ்வீகரிஸி |**
**ஸாரி பேளித$^{3}$ தன் நாகா$^{3}$ரக்கெ ப$^{3}$ந்து$^{3}$ தா**
**நாரிய முந்தெ$^{3}$ விஸ்தரிஸி ||6**

இவ்வாறாக அந்த வணிகன், அந்த பூஜையை பார்த்து, பக்தியுடன் பிரஸாதத்தை ஏற்றுக் கொண்டு, அரசனிடம் விடை பெற்று, தன் ஊருக்கு திரும்பி வந்து, தன் மனைவியின் முன் அந்த விரதத்தினை விளக்கிக் கூறினான்.

**பதிய வசன கேளி ஸதிஶிரோமணி லீலா**
**வதியு தன்ன மந்தி$^{3}$ரதி$^{3}$ |**
**ஹிததி$^{3}$ருதிரெ ஶிரிபதிகருணதி$^{3}$ க$^{3}$ர்ப்ப$^{4}$**
**வதி தானாத$^{3}$ளாக்ஷணதி$^{3}$ ||7**

கணவனின் பேச்சினைக் கேட்டு, அந்தப் பெண் லீலாவதி, தன் வீட்டில் இந்த பூஜையை செய்யலாம் என்று தீர்மானிக்க, ஸ்ரீஹரியின் கருணையால், அவள் உடனடியாக கர்ப்பவதி ஆனாள்.

**ஹத்தனெமாஸதி3 உத்தம புத்ரிய**
**பெத்தளு ஆ நாரி தானு |**
**அத்யந்தஸன்முத3 சித்தனாகி3 ஸாது4**
**மர்தனு ஹரிவ்ரதவன்னு ||8**

அந்தப் பெண், அடுத்த 10 மாதங்களில் ஒரு நல்ல குழந்தையை பெற்றெடுத்தாள். அந்தக் குழந்தையை பார்த்த அந்த மது நாமக வணிகன், தான் செய்வதாக தீர்மானித்திருந்த ஸ்ரீஹரியின் விரதத்தை, ஸ்ரீஸத்ய நாராயண விரதத்தை மறந்தான்.

**ஸுதெ1யு புட்டித3 மேலெ ஸதிலீலாவதி தன்ன**
**பதிகபி4வந்தி3ஸி நிந்து3 |**
**அதிப4க்தியிந்த3லி கதி2ஸி கொண்ட3ளு யது3**
**பதிவ்ரத மாட3பே3கெந்து3 ||9**

இவ்வாறாக தங்களுக்கு குழந்தை பிறந்தபிறகு, மனைவியான லீலாவதி, தன் கணவனை வணங்கியவாறு அவனின் எதிரில் நின்று, மிகவும் பக்தியுடன் - தாங்கள் செய்ய வேண்டிய ஸ்ரீஹரியின் விரதத்தைப் பற்றி நினைவுபடுத்தினாள்.

**ஸுத3திய நுடி3 கேளி மது4 நாமக ஸாது4**
**விதி4ஸித3 ஸுதெ கலாவதியா |**
**மது3வெய காலதி3 யது3பனர்ச்சிபெனெந்து3**
**முத3தி3ந்த3 பேள்த3னுபாயா ||10**

தன் மனைவியின் பேச்சினைக் கேட்ட அந்த மது நாமக வணிகன், தன் மனைவியிடம் இவ்வாறு கூறினான். தங்களுடைய அந்தக் குழந்தையான கலாவதி, வளர்ந்து, பெரியவளாகி, அவளுக்கு திருமணம் செய்யும் காலத்தில், தான் அந்த ஸ்ரீஸத்ய நாராயண விரதத்தை செய்வோம் - என்று கூறினான்.

**பரிபரி ஸௌக்2யதி3ந்த3ருதிரெ வைஶ்யன**
**தருளெகெ3 பூர்ண யௌவனவு |**
**ப3ரலு மாடி3த3 தக்கவரதந்து3 லக்3னவ**

**மரெது பி$^{3}$ட்டனு ஹரி வ்ரதவ ||11**

அந்த வணிக தம்பதிகளின் மகள், மிகவும் வைபவத்துடன், வளர்ந்து திருமணத்திற்கு ஏற்ற வயதினை அடைந்தாள். மது வணிகனும் அவளின் திருமணத்தை சிறப்பாக நடத்தினான். ஆனால், தான் செய்வதாக தீர்மானம் செய்திருந்த ஹரி விரதத்தினைப் பற்றி மறந்து விட்டான்.

**ஸ்ரீமந்தவைஶ்யனு ப்ரேமதி$^{3}$ந்த$^{3}$லி தன்ன**
**ஜாமாதனொட$^{3}$னெ வ்யாபார |**
**நேமதி$^{3}$ கெ$^{3}$ய்யலு க்$^{3}$ராமத்யஜிஸி போத$^{3}$**
**ஆ மஹாபுரரத்ன ஸாரா ||12**

தன் மகளுக்கு திருமணம் செய்து வைத்த அந்த வணிகன், தன் மாப்பிள்ளையுடன் சேர்ந்து தன் தொழிலை வளர்த்தான். ஒரு முறை, தொழில் நிமித்தமாக ஒரு பெரிய நகரை நோக்கி, தன் மாப்பிள்ளையுடன் சென்றான்.

**ஈ நகரகெ ப$^{3}$ந்து$^{3}$ வாணிஜ்ய வ்யாபார**
**மாணதெ$^{3}$ தா மாடு$^{3}$திரலு |**
**ஸ்ரீநிவாஸனு கோப மானஸத$^{3}$லி ஸுக$^{2}$**
**ஹீனனாகெ$^{3}$ந்து$^{3}$ ஶாபிஸலு ||13**

அந்த பெரிய நகரத்துக்கு வந்த வணிகன், தன் வியாபரத்தை அருமையாக செய்து கொண்டிருந்தான். சொல்லியபடி, ஸ்ரீஸத்ய நாராயண விரதத்தை அவன் செய்யாததால், பகவந்தனான ஸ்ரீனிவாசன், அவனுக்கு சுகக்குறைவு ஆகட்டும் என்று சபித்தான்.

**குபிததி$^{3}$ந்த$^{3}$லி ஸ்ரீப ஶபிஸலு ஆ புர**
**ந்ருபன மந்தி$^{3}$ரதி$^{3}$ தஸ்கரரு |**
**குபிததி$^{3}$ந்த$^{3}$லி போகி$^{3}$ விப்ரலத்$^{3}$ரவ்யக$^{3}$ளெல்ல**
**கபடதி$^{3}$ந்த$^{3}$ அபஹரிஸித$^{3}$ரு ||14**

இவ்வாறாக அவனுக்கு பாடம் புகட்ட வேண்டி ஸ்ரீனிவாஸன் செய்யும் இந்த நாடகத்தின் ஒரு பகுதியாக, அந்த நகரத்து

அரசனின் அரண்மனைக்கு திருடர்கள் சென்று, அங்கிருந்த செல்வங்கள் அனைத்தையும் கொள்ளை அடித்தனர்.

**வித்தாபஹரிஸித3 முத்தசோரரு தாவு**
**ஜத்தாகி3 ஓடு3த்திரலு |**
**மத்தெ மரளி நோடெ3 அத்யவஸரதி3ந்த3**
**ப்4ருத்யஜனரு ப3ருதிரலு ||15**

அந்த செல்வங்களை கொள்ளையடித்த திருடர்கள், அங்கிருந்து ஓடத் துவங்கியபோது, அந்த அரண்மனையிலிருந்து சேவகர்கள், மக்கள் என பலரும் இவர்களை துரத்தத் துவங்கினர்.

**வஸுதி4பாலகன கை வஶவாதெ3னெம்ப3ந்த2**
**வ்யஸனதி3ந்த3லி அகி2ளரு**
**நிஶியொளு தந்தி3த்3த3 வஸு வைஶ்ய ஜனரல்லி**
**பி3ஸுடி நிந்தி3ரதெ3 ஓடி3த3ரு ||16**

நகர அரசனிடம், அவனது சேவகர்களிடம், மாட்டிக் கொள்ளக்கூடாது என்று அந்த திருடர்கள், தாங்கள் கொண்டு வந்த பொருட்கள் அனைத்தையும், மது வணிகனின் வீட்டில் வீசிவிட்டு, அங்கே நிற்காமல் தப்பித்து ஓடிவிட்டனர்.

**அரஸன தூ3தரு அரஸுத்த சோரர**
**ப3ரலு உப4யவைஶ்யரல்லி |**
**இருவ த்3ரவ்யவ கண்டு3 து3ருளரு இவரெந்து3**
**அரிது தம்ம சித்தத3லி ||17**

அந்த திருடர்களை துரத்தி வந்த அரசனின் சேவகர்கள், தங்கள் அரசனின் பொருட்கள் அனைத்தும், மது வணிகனின் வீட்டில் இருப்பதைக் கண்டனர். வணிகன் மற்றும் அவனது மாப்பிள்ளை இருவரே தாம் தேடி வந்த திருடர்கள் என்று நினைத்தனர்.

**பி3ட3தெ3 ஆ வைஶ்யர பிடி3தெ3ளெதந்த3ரு**
**உடு3பத்4வஜாதி4பனல்லி |**
**நுடி3த3ரு தம்மய ஒட3வெய கத்3த3ந்தா2**

**கடு3து3ஷ்டரிவரென்னுத ||18**

உடனே அந்த வணிகன் மற்றும் அவனது மாப்பிள்ளை இருவரையும் இழுத்துச் சென்று தம் அரசன் முன் நிறுத்தினர். தங்களின் பொருட்களை திருடிச் சென்ற கொள்ளையர்கள் இவர்களே என்று தலைவனின் கூறினர்.

**தூ3தரு பேளித3 மாது கேளுத பூ4**
**நாத2னு நுடி3த3னு ஜவதி3 |**
**யாதக்கெ தட3வு நிர்பீ4திலி ஹாகிரி**
**பாதகிக3ள ஸெரெக்3ருஹதி3 ||19**

தூதர்கள் (சேவகர்கள்) கூறிய பேச்சினைக் கேட்ட அந்த அரசன், ஏன் இன்னும் தாமதம், உடனடியாக இந்த இருவரையும் சிறையில் அடையுங்கள் - என்று ஆணையிட்டான்.

**அந்த3வசன கேளி ச2ந்த3தி3 தூ3தரு**
**ப3ந்தி4ஸி ஸங்கோ1லெயிந்த3**
**தந்து3 ஹாகலு ஸெரெமந்தி3ரதி3த்3த3ரு**
**மந்த3பா4க்3யரு ஸ்ரமதி3ந்த3 ||20**

அரசனின் ஆணையைக் கேட்ட சேவகர்கள், உடனடியாக இந்த மது வணிகனையும், அவனது மாப்பிள்ளையையும், சங்கிலியால் கட்டி, சிறையில் அடைத்தனர். மந்தபாக்கியர்களான இந்த இருவரும், மிகவும் கஷ்டத்துடன் சிறையில் இருந்தனர்.

**இத்த ஆ வைஶ்யன புத்ரிபத்னியளி**
**க3த்யந்த ப3ட3தன ப3ரலு |**
**துத்தன்ன காணதெ3 நித்ய நித்யதி3 திர**
**கு3த்த பி4க்ஷவ பே3டு3திரலு ||21**

அந்த சமயம், ஊரில் அந்த வணிகனின் மனைவி மற்றும் மகள் இருவருக்கும் இருந்த செல்வங்கள் கரைந்து போக, இருவரும் ஏழ்மை நிலையை அடைந்தனர். வேறு வழி தெரியாமல், தினமும் அவர்கள் சாலைகளில் திரிந்தவாறு, பிக்ஷை எடுத்து தின்றனர்.

**ஒந்து$^{3}$தி$^{3}$னதி$^{3}$ ஸாது$^{4}$ நந்தி$^{3}$னி பி$^{4}$க்ஷெகெ**
**ப$^{3}$ந்த$^{3}$ளு விப்ரன மனெகெ$^{3}$ |**
**ச$^{2}$ந்த$^{3}$தி$^{3}$ ஆ த்$^{3}$விஜமந்தி$^{3}$ரதொ$^{3}$ளு நிஜ**
**இந்தி$^{3}$ரேஶன சன்னாகி$^{3}$ ||22**

ஒரு நாள், அந்த வணிகனின் மகள் கலாவதி, பிக்ஷை வேண்டி ஒரு பிராமணனின் வீட்டிற்கு வருகிறான். அந்த வீட்டில் அன்று ஸ்ரீஸத்ய நாராயண விரதத்தை, மிகவும் கோலாகலமாக...

**வித$^{4}$தி$^{3}$ பூஜிஸி பூ$^{4}$பு$^{3}$த$^{4}$னிந்த$^{3}$ கதெ$^{2}$யன்னு**
**முத$^{3}$தி$^{3}$ந்த$^{3}$ கேளுத்தலிரலு |**
**ஸுத$^{3}$தி கலாவதி அத$^{3}$னு லாலிஸி தன்ன**
**ஸத$^{3}$னக்கெ மரளி ப$^{3}$ந்த$^{3}$ளு ||23**

கொண்டாடி, தக்க பிராமணர் மூலமாக ஸ்ரீஸத்ய நாராயண விரத கதையை சொல்லச் செய்து அனைவரும் கேட்டுக் கொண்டிருந்தனர். கலாவதியும் மிகவும் பக்தியுடன் அந்த கதையைக் கேட்டு, தன் வீட்டிற்கு திரும்பி வந்தாள்.

**ப$^{3}$ந்து$^{3}$ தன்னய தாயி முந்தெ$^{3}$ பேள்த$^{3}$ளு ஸத்ய**
**நந்த$^{3}$னந்த$^{3}$ன சரிதெயன்னு |**
**நந்தி$^{3}$னியள மாது ச$^{2}$ந்த$^{3}$தி$^{3}$ கேளுத்த**
**அந்து$^{3}$கெ$^{3}$ய்த$^{3}$ளு த்$^{4}$ருட$^{3}$வன்னு ||24**

வீட்டிற்கு வந்த கலாவதி, தன் தாயிடம் இவ்வாறு தான் பார்த்த ஸ்ரீஸத்ய நாராயண பூஜையையும், அதன் கதையையும் விளக்கினாள். மகள் கூறிய விவரங்களைக் கேட்ட தாய், உடனடியாக ஒரு தீர்மானம் செய்தாள்.

**பதியு ஜாமாதன யுதனாகி$^{3}$ பரலெந்து$^{3}$**
**அதிப$^{4}$க்தியலி ஶௌரிவ்ரதவா |**
**ஸுதெ ஸஹிததி$^{3}$ கெ$^{3}$ய்து$^{3}$ க்ஷிதிஸுரபரிமுக$^{2}$**
**ஹிததி$^{3}$ கேள்த$^{3}$ளு ஹரிகதெ$^{2}$யா ||25**

தன் கணவரும், மாப்பிள்ளையும் நலமாக திரும்பி வரவேண்டும் என்றும், அவ்வாறு வந்தால், தம் குடும்பம், உற்றார் உறவினர் ஆகிய அனைவருடனும் சேர்ந்து, பிராமணர்களை அழைத்து, ஸ்ரீஸத்ய நாராயண விரதத்தை தான் செய்வதாக சங்கல்பம் செய்தாள்.

**ஸத்யதே3வேஷகெ3 அத்யந்த த3ய புட்டி**
**ப்ருத்2விபாலன ஸ்வப்னத3லி |**
**வித்தபஹரிஸித3 மத்தரல்லவு இவ**
**ருத்தமரெந்து3 பேளுதலி ||26**

இதனைக் கண்ட கருணைக்கடலான பகவந்தனுக்கு, அவர்கள் மேல் கருணை வந்தது. அந்த அரசனின் கனவில் சென்று, உன் பொருட்களை திருடியவர்கள் இவர்கள் அல்ல. அது வேறு யாரோ. இந்த மது வணிகனும் அவனது மாப்பிள்ளையும் உத்தமர்கள் என்று கூறினான்.

**பொட3விப அவரன்னு பி3ட3தி3ரெ நா நின்ன**
**கடு3ஸம்பத3 ஸாம்ராஜ்ய |**
**ஒட3வெ வஸ்துக3ளெல்ல பி3ட3தீ3க3 ஜெ□ யுவெ**
**த்4ருடவெந்து3 பா4விஸு ராஜா ||27**

மேலும் பகவந்தன் அரசனின் கனவில் இவ்வாறு கூறினான். உடனடியாக நீ அவர்களை சிறையிலிருந்து விடுவிக்கவில்லை என்றால், உன்னுடைய அரசு, செல்வம், பொருட்கள் என அனைத்தையும் நான் பறித்துவிடுவேன். இது சத்தியம் - என்றான்.

**பரமசித்ததி3ந்த3 த4ரணிப தானெத்து**
**கரெஸூத ஸெரெயொளித்3த3வரா |**
**அருஹித3 அவரிகெ3 தெரளிரி நிமகி3ன்னு**
**ஹரித3யவாயிது பூரா ||28**

தூக்கத்திலிருந்து எழுந்த அந்த அரசன், தன் கனவில் வந்த குறிப்பினை நினைவுபடுத்திக் கொண்டு, உடனடியாக சிறையில்

இருந்த மது வணிகன் மற்றும் அவனது மாப்பிள்ளை இருவரையும் வரச் செய்து, நீங்கள் பகவந்தனின் கருணைக்கு பாத்திரம் ஆனவர்கள். நீங்கள் நிரபராதி. உங்களை விடுதலை செய்கிறேன். சென்று வாருங்கள் - என்றான்.

**தெகெ3தி3த்3த3 த்3ரவ்யக்கெ த்3விகு3ண கொட்டவரிகெ3**
**மிகெ3மாடு3த ப3ஹுமானா |**
**ஸுகு3ணபூ4பாலனு பொக3ளித3 மனதொ3ளு**
**க2க3த்4வஜ ஶ்யாமஸுந்த3ரன ||29**

மேலும் அந்த அரசன் இவ்வாறு நினைத்தான். எந்த பொருளையும் திருடாத இவர்களிடமிருந்து, நாம் இரு மடங்கு பொருட்களை எடுத்துக் கொண்டோம். ஆகவே, அதைவிட அதிகமான செல்வங்களை மறுபடி அவர்களுக்கு அளித்து, அனுப்பி வைப்போம் - என்று நினைத்து, அவ்வாறே செய்தான். கருடத்வஜனான ஶ்யாம ஸுந்தரனை நினைத்து, பகவந்தனின் மகிமைகளை போற்றினான் அந்த அரசன்.

### || இதி ஸ்ரீஸத்ய நாராயண கதா த்ருதீய அத்யாய: ||

***

## 4ம் அத்தியாயம்

**கதி2ஸுவெ கேளிரி ஹிததி3 முந்தா3கு3வ**
**ரதிபதி ஜனகன சரிதா |**
**க்ஷிதபணாக்ஞதி3 ஸாது4 அதிஜவ தனபுர**
**பத2 ஹிடி3த3னு ஸஜாமாதா ||1**

ஸௌனகாதிகளுக்கு ஸூத முனிவர் மேலும் கூறுவது: மகிழ்ச்சியுடன் கேளுங்கள். மன்மதனின் தந்தையான பகவந்தனின் கதையை தொடர்ந்து சொல்கிறேன். அந்த அரசனின் ஆணைப்படி, வணிகன் தன் மாப்பிள்ளையுடன், தன் ஊருக்கு செல்லும் பாதையை பிடித்தான்.

**ப3ருவ வைஶ்யன கு3ண பரகிஸலோஸுக3**
**ஹருஷதி3ந்த3லி யதிரூபா |**
**த4ரிஸி ப3ந்த3னு ஆரு அரியத3ந்த3தி3 க2ர**
**முரவைரி து3ரித நிர்லேபா ||2**

இவ்வாறு ஊர் திரும்பும் வணிகனின் குணத்தை சோதித்துப் பார்க்க வேண்டி, முரவைரியான, அனைவரின் கஷ்டங்களையும் போக்குபவனான, ஸ்ரீஹரி, யாரும் அறியா வண்ணம், ஒரு யதி ரூபத்தை தாங்கி, இவர்களிடம் வந்தான்.

**கடு3ஜவதி3ந்த3லி ஜட3தி4 தீரக்கெ ப3ந்து3**
**ம்ருட3வந்தி3த மஹாராயா |**
**ஹட3க3தொ3ளிருவந்த2 ஒட3வெ கேளலு ஸாது4**
**புடு3கித3 பேளலுபாயா ||3**

ருத்ரரால் வணங்கப்படுபவரான மஹாராயரான ஸ்ரீஹரி, உடனடியாக, அந்த நதிக்கரைக்கு வந்து, வணிகனிடம் - உன்னுடைய இந்த ஓடத்தில் என்ன இருக்கிறது? - என்று கேட்டான். அந்த வணிகன் அதற்கு உண்மையை கூறாமல் பொய் கூறினான்.

**சீரவல்கல உட்ட சாருமூர்த்திய வி**
**சார மாட3தெ3 ஆ க்ருபணா**
**சோரனு இவனெந்து3 ஸாரித3 இத3ரொளு**
**ஸோரிஸிருவெ லதாபர்ண ||4**

மரக்கிளைகளையும், மான் தோல்களையும் உடுத்திய அந்த அழகான மூர்த்தியை, கருணைக்கடலை ஒரு திருடன் என்று நினைத்து, வணிகன் இவ்வாறு அவனிடம் பொய் கூறினான். இந்த ஓடத்தில், இலைகள், கொடிகள் ஆகியவை உள்ளன என்றான்.

**கூ3ட4கபடதி3 ஸாது4 நுடி3த3 பா4ஷெய கேளி**
**பொட3வீஷ பன்னங்க3ஶயனா ||**
**தடெ3யதெ3 மனதொ3ளு கடு3கோபத3லி பேள்த3**

**த்4ருட3வாகி3லி நின்ன வசனா ||5**

தந்திரத்துடன் பொய் உரைத்த அந்த வணிகனின் பேச்சினைக் கேட்டு, பூமியின் தலைவனான (உலக நாயகனான), பாம்புப் படுக்கையில் படுத்திருப்பவனான ஸ்ரீஹரி, மனதில் எழுந்த கோபத்துடன் இவ்வாறு கூறினான். நீங்கள் சொன்னது, அப்படியே ஆகட்டும்.

**ஸிட்டினிந்த3லி பரமேஷ்டிபிதனு ஶாப**
**கொட்டு தா போக3லு இத்த |**
**ப்4ரஷ்ட வைஶ்யனு தா த2ட்டனெ நோடி3த3**
**பெட்டிகெ3யொளகி3த்3த3 வித்த ||6**

இவ்வாறு ஸ்ரீஹரி கோபத்துடன், வணிகனுக்கு சாபம் கொடுத்தான். பிறகு, அந்த வணிகன் தன் உடமைகளை திறந்த பார்த்தபோது, அதிலிருந்த செல்வங்கள்...

**வ்ரததிபர்ணக3ளிந்த3 யுதவாத3து3 கண்டு3**
**பதித விஶ்வாஸ கா4தகனு |**
**வ்யதெ2 பூரிதனாகி3 ஸ்ம்ருதிதப்பி தே3ஹதோ3ள்**
**ப்ருதி2விகெ3 தானுருளித3னு ||7**

இலை, தழைகளால் நிறைந்திருந்ததைக் கண்டு, மனம் கலங்கினான். மயங்கினான். நினைவு தப்பி, மயங்கி, பூமியில் விழுந்தான்.

**வஸுவ்யாகுலதி3ந்த3 வஸுதி4யொள் மலகி3த்த3**
**ஶ்வஶுரகெ3 நுடி3த3 ஜாமாதா |**
**ரிஷிவரனிகெ3 நீனு புஸிமாடி3து3த3ரிந்த3**
**வ்யாஸனவாயிது திளி த்வரிதா ||8**

மனம் கலங்கி பூமியில் விழுந்திருந்த மாமனாரைப் பார்த்து மாப்பிள்ளை இவ்வாறு கூறினான். அந்த ரிஷி முனிவரிடம் நீ பொய் கூறியதால், இந்த நிலை உண்டானது, தெரிந்து கொள்ளுங்கள்.

**ஸுகு³ணரஹித ஸாது⁴ மக³ள க³ண்ட³ன மாது**
**ஸொக³ஸிலிந்த³லி கேளுத்தா |**
**முகி³த³ யதிகெ³ கரயுக³தி³ தன்னபரா**
**த⁴க³ள க்ஷமிஸ பே³கெனுதா ||9**

நற்குணங்கள் இல்லாதவனான (பொய் கூறிய) அந்த வணிகன், தன் மாப்பிள்ளையின் பேச்சினைக் கேட்டு, அந்த யதிகளை தேடி கண்டுபிடித்து, அவரிடம் கை குவித்து வணங்கி, தன் தவறினை மன்னிக்கும்படி வேண்டிக் கொண்டான்.

**பரிபரி ப்ரார்த்தி²ஸி மொரெயிட³லாக்ஷண**
**ஶரணவத்ஸல ஜிதகோபா**
**கருணதி³ந்த³லி ஶாப பரிஹரிஸி தானு**
**தெரளித³ ஸுரனுத ஸ்ரீப ||10**

இவ்வாறு அந்த வணிகன், திரும்பத்திரும்ப அந்த யதிகளிடம் வேண்டிக் கொள்ள, பக்தவத்ஸலனான, கோபமே அற்றவனான, பகவந்தன், தான் முன்னர் கொடுத்த சாபத்தை கருணையுடன் பரிகரித்து, தன் இருப்பிடத்திற்கு திரும்பினான்.

**மத³ன பிதன த³ய ஒத³க³லு க⁴னதர**
**மது⁴ நாமக வ்யாபாரி |**
**உத³தி⁴தீரதி³ நிஜபது³மேஶன பூஜெ**
**முத³தி³ கெ³ய்த³னு பரிபரி ||11**

மன்மதனின் தந்தையான ஸ்ரீஹரியின் கருணை கிடைத்துவிட, அந்த மது நாமக வணிகன், உடனடியாக அதே நதி தீரத்தில், ஸ்ரீஸத்ய நாராயண விரதத்தினை மிகவும் மகிழ்ச்சியுடன் செய்தான்.

**ஶிரிவரனர்ச்சிஸி தருவாயத³லி ஸாது⁴**
**ப⁴ரதி³ நாவீரொட⁴னாகி³ |**
**தெரளி ப³ந்த³னு ரத்னபுரனிகடகெ தன்ன**
**தருளேஶன ஸஹிதாகி³ ||12**

பூஜை முடித்து, பகவந்தனை அர்ச்சித்து, பிறகு அந்த வணிகன், படகில் ஏறி, ரத்னபுர என்னும் தன் இடத்திற்கு, தன் மாப்பிள்ளையுடன் திரும்பி வந்தான்.

**பூ4ரிமுத3தி3 அப்தி4தீரக்கெ ப3ந்த3ந்த2**
**வாருதி1யனு அதிபே3கா3 |**
**கா3ரதி3ருவ தன்ன நாரிகெ3 பேளலு**
**சாரன்ன களுஹித3னாக3 ||13**

மிகவும் மகிழ்ச்சியுடன் தன் ஊருக்கு அருகில் உள்ள கரைக்கு வந்த உடனேயே, ஒரு தூதுவனை அழைத்து, தனக்காக காத்திருக்கும் தன் மனைவியிடம் தான் வந்து கொண்டிருக்கும் விஷயத்தை சொல்வதற்காக அனுப்பினான்.

**ஸதிலீலாவதி தானு பதிப3ந்த3 ஸங்க3தி**
**அதிஜவத3லி கேளுத்த |**
**மிதிமீரித3 ஸுக2பூ1ரிதளாகி3 ஹரிவ்ரத**
**ஸுதெக3ருஹித3ளு மாடெ3னுத ||14**

வணிகனின் மனைவியான லீலாவதி, தன் கணவன் நலமுடன் திரும்பி வரும் விஷயத்தை கேட்டு, மட்டற்ற மகிழ்ச்சி அடைந்து, உடனடியாக தன் மருமகளை அழைத்து, ஸ்ரீஸத்ய நாராயண விரதத்தை செய்யுமாறு கூறினாள்.

**ஹருஷதி3ந்த3லி பேளி ப4ரதி3 ப3ந்த3ளு பதி**
**த3ருஶன மாடி3கொள்ளலு |**
**தருளெ கலாவதி ஶௌரி ப்ரஸாத3 ஸ்வீ**
**கரிஸதெ3 ஶரதி4கெ3 ப3ரலு ||15**

கணவன் வந்த மகிழ்ச்சியில், வணிகனின் மனைவியானவள் அவனை பார்ப்பதற்காக வேகவேகமாக நதிக்கரைக்கு வந்தாள். மருமகளான கலாவதியும், பூஜை முடித்து, பிரஸாதத்தை எடுத்துக் கொள்ளாமல், அந்த இடத்திற்கு வந்து சேர்ந்தாள்.

**மலஹாரி ப்ரஸாத3 லலனெயு மரெயலு**
**ஜலஜாக்ஷ தாளுத்த கோப |**
**க4ளிலனெ க4ன நாவியொளகி3ருவாகெ1ய**
**சலுவபதிய முளகி3ஸித3 ||16**

நம் பாவங்களை போக்க வல்ல ஸ்ரீஸத்ய நாராயணனின் பிரஸாதத்தை, மருமகள் மறந்துவிட, ஸ்ரீஹரிக்கு கோபம் வந்தது. உடனடியாக, படகில் அமர்ந்திருந்த அவளுடைய கணவனை படகுடன் சேர்ந்து மூழ்கடித்தான்.

**ஶரதி4யொள் முளுகி3ஹ ஹரணபதிய நோடி3**
**தருணிகலாவதி த4ரெகெ3 |**
**மருகி3 வரகி3 மெய்மரெது3 பீ3ளலு ஸ**
**ர்வரு ஶோஜிக3வெந்த3ராக3 ||17**

கடலில் மூழ்கிய தன் கணவனைப் பார்த்து, மனைவியான (மருமகள்) கலாவதி, மிகவும் அதிர்ச்சி அடைந்து, மெய்மறந்து தரையில் மயங்கி விழுந்தாள். அப்போது அனைவரும் அதிசயிக்கும் வண்ணம் ஒரு விஷயம் நடந்தது.

**தனுஜெய ஶோகவ ஜனனிபிதரு நோடி3**
**மனதொ3ளு ப3ஹுது3க்கி2ஸித3ரு |**
**க4னதரப4க்திலி மனஸிஜரிபுனுத**
**வனதி4ஶாயிய ப4ஜிஸித3ரு ||18**

இந்தப் பெண்ணின் சோகத்தினை / துக்கத்தினை பார்த்து, அங்கிருந்த பிராமணர்கள் மிகவும் துக்கம் கொண்டனர். மிகவும் பக்தியுடன், மனதின் எதிரிகளை அழிப்பவனான, பகவந்தனை பஜித்தனர் / வணங்கினர்.

**வனசர கூர்மனெ வனதி4வஸனெ பதி**
**மனுஜ கண்டீ2ரவ பா3லா**
**ஜனனிய கொந்த3ந்த2 ஜனகஜாபதி ரங்க3**
**அனலாக்ஷ ஸக2 க2லகால ||19**

வனசர - (அது ஜலசர என்று இருக்கலாம்) மத்ஸ்யனே; கூர்மனே - கூர்மனே; வனதி வஸனெ - வராகனே; பதி - (இந்தப் பெண்ணின் கணவனை கொன்றவனே); மனுஜ கண்டீரவ - நரசிம்மனே, பாலா - வாமனனே; ஜனனிய கொந்தந்த - பார்க்கவனே; ஜனகஜாபதி - ஸ்ரீராமனே; ரங்க - கிருஷ்ணனே; அனலாக்ஷ ஸக - ருத்ரதேவரின் நண்பனே; கலகால - பௌத்தனே, கல்கியே.

**சித்ததி$^3$ந்த$^3$லி ஸாது$^4$ ஸத்ய தே$^3$வேஶன**
**ஹத்து நாமவ ப$^4$ஜிஸலு |**
**ப்ருத்$^2$விஜ பதி புருஷோத்தமகெ$^3$ ஆக$^3$**
**அத்யந்த கருண புட்டலு ||20**

இவ்வாறு மிகவும் பக்தியுடன், அந்த வணிகன், ஸ்ரீஸத்ய நாராயணனின் 10 அவதாரங்களையும் சிந்தித்து வணங்க, உலக நாயகனான புருஷோத்தமனுக்கு அப்போது இவர்கள் மேல் அதிக கருணை பிறந்தது.

**ஹரிபத$^3$த$^3$லி நிந்து$^3$ ஹரிவந்தி$^3$தனாத$^3$**
**ஹரி நுடி$^3$த$^3$னு ப்ரஸாதா$^3$ |**
**ஹரிணாக்ஷி போகி$^3$ ஸ்வீகரிஸீ ப$^3$ந்த$^3$ரெ பரி**
**ஹரிஸுவது$^3$ ஈ கே$^2$தா$^3$ ||21**

வானில் நின்று (அசரீரியாக), ஸ்ரீஹரியை வணங்கியவரைப் பார்த்து, ஸ்ரீஹரி இவ்வாறு கூறினார். ஸ்ரீஸத்ய நாராயண விரதத்தின் பிரசாதத்தை, இந்தப் பெண் சென்று ஏற்றுக் கொண்டால், இந்த துன்பமானது உடனடியாக விலகிவிடும்.

**தக்ஷணத$^3$லி அந்தரிக்ஷவாணிய கேளி**
**லக்ஷணவந்தி ப்ரஸாத$^3$ |**
**ப$^4$க்ஷிஸி ப$^3$ரலாக$^3$ லக்ஷ்மீஶவயூக**
**டாக்ஷதி$^3$ ஆயிது மோதா$^3$ ||22**

அந்த அசரீரியைக் கேட்டு, அழகான லட்சணங்களைக் கொண்ட அந்தப் பெண், உடனடியாக வீட்டிற்கு சென்று, அந்த பிரசாதத்தை

ஏற்றுக் கொள்ள, லட்சுமீஷனான பகவந்தனின், அபாரமான கருணையினால், அவளுடைய துன்பம் விலகியது. (அவளுடைய கணவன் உயிருடன் திரும்பினான்).

**ச2ந்த3தி3ந்தெ3ல்லரு ப3ந்து3 ப்ரதி மாஸதி3**
**மந்தி3ரதொ3ளு கெ3ய்து3 வ்ரதவா**
**நந்த3 ஈ ஜக3தொ3ளு பொந்தி3 ஶேர்த3ரு**
**ஶ்யாம ஸுந்த3ர விட்டலபுரவா ||23**

அந்த குடும்பத்தினர் அனைவரும், மிகவும் மகிழ்ச்சியுடன், ஒவ்வொரு மாதமும், தன் வீட்டில் இந்த ஸ்ரீஸத்ய நாராயண விரதத்தை செய்து, இந்த உலகில் அனைத்துவித மகிழ்ச்சிகளையும் அடைந்து, பின்னர் கடைசியில் ஸ்ரீஶ்யாம ஸுந்த3ர விட்டலனின் புரமான, வைகுண்டத்தை (மோட்சத்தை) அடைந்தனர்.

**|| இதி ஸ்ரீஸத்ய நாராயண கதா சதுர்த்ய அத்யாய: ||**

***

## 5ம் அத்தியாயம்

**ஸாது4ஜனரெ கேளி வேத4பிதன ப்ர**
**ஸாத3மஹிமெ க4னவாதா3**
**கா3த4 சரிதெயனு போ3தி4பெ நிமகீ3க3**
**ஸ்ரீத4ரக3ரெவ ஸன்மோதா3 ||1**

ஸூத முனிவர் மேலும் கூறுகிறார்: ஹே ஸாது ஸஜ்ஜனர்களே. ஸ்ரீபகவந்தனின் அற்புதமான பிரஸாத மகிமைகளைப் பற்றி மேலும் சொல்கிறேன் கேளுங்கள். அவனுடைய சரித்திரத்தை சொல்கிறேன். இதனைக் கேட்பதால், ஸ்ரீதரனுக்கு த்ருப்தி உண்டாகிறது.

**பூ4தளதொ3ள் துங்க3கேது நாமக ந்ருப**
**க்2யாதி பொந்தி3ரலொந்து3தி3னதி3 |**
**ப்ரீதியிந்த3லி ம்ருக3வ்ராததரியலு போத3**
**பீ4தி இல்லதெ3 கானனதி3 ||2**

இந்த தேசத்தில், துங்ககேது என்னும் ஒரு அரசன் மிகவும் புகழ்பெற்றவனாக இருந்தான். ஒரு நாள், அந்த அரசன், மிருகங்களை வேட்டையாடுவதற்காக, எவ்வித பயமும் இன்றி, தனியாக காட்டிற்குள் சென்றான்.

**ஶரத4னுவிகெ3 ஹோடி3 ஹரி ஹுலிக3ள ஸம்**
**ஹரிஸி சரிஸி ப்3யாஸரதி3 |**
**புரத3 ஸாமீப்யதி3 இருவ பர்பத3 பட**
**தரு நெரளிகெ3 ப3ந்த3 ஜவதி3 ||3**

அம்பினை, வில்லில் நாண் ஏற்றி, சிங்கம், புலிகளை வேட்டையாடி கொன்று, பின்னர், தாகம் ஏற்பட்டு, அருகில் இருந்த ஒரு ஆல மரத்து நிழலில் சென்று இளைப்பாறினான்.

**தொ4ரெயு மிஸ்ரமிஸித3 தருஸன்னிதி4யல்லி**
**துரு பா1லகரெல்ல நெரெது3 |**
**ஹரி பூஜெயனுகெ3ய்து3 வரஸு ப்ரஸாத3வ**
**த4ரணிபனல்லிகெ3 ஒய்து3 ||4**

இவ்வாறு அரசன் ஓய்வெடுக்கும் இடத்தின் அருகிலேயே, அந்த கிராமத்து சிறுவர்கள் பலர், ஸ்ரீஸத்ய நாராயண பூஜையை செய்து கொண்டிருந்தனர். பின்னர், அந்த பூஜையின் பிரஸாதத்தினை அரசனுக்குக் கொடுக்க வேண்டி, அங்கு வந்தனர்.

**வந்தி3ஸி முந்தி3டெ3 நிந்தி3ஸி தன்னய**
**மந்தி3ரகெ ப3ரலவனா**
**நந்த3வு குந்தி3து இந்தி3ரெ போத3ளு**
**நந்த3னரளித3ரு முன்னா ||5**

அந்த மக்கள் அரசனை வணங்கி, ஸ்வாமி பிரஸாதத்தை அவன் முன் வைக்க, அரசனோ அவர்களை திட்டியவாறு, பிரஸாதத்தை புறக்கணித்து, தன்னுடைய அரண்மனைக்கு திரும்பினான். அன்றிலிருந்து அவனுடைய மகிழ்ச்சி குறைந்தது. செல்வம் அழிந்தது. அவனுக்கு முன்னாலேயே அவனுடைய மக்கள் அனைவரும் இறந்தனர்.

**ஹரிய ப்ரஸாத$^{3}$ தி$^{4}$க்கரிஸித$^{3}$ காரண**
**ஸரியிதென்னகெ$^{3}$ ஸாம்ராஜ்ய |**
**த்வரிததி$^{3}$ மனதொ$^{3}$ளு அரிது தா மருகி$^{3}$தா$^{3}$**
**பரமப$^{4}$க்திலி ஆ ராஜா ||6**

ஸ்ரீஹரியின் பிரஸாதத்தை புறக்கணித்ததாலே, தன்னுடைய அரசையும் நான் இழந்தேன் என்பதை உடனடியாக தன் மனதில் அறிந்த அந்த அரசன், அதற்காக வருந்து, பகவந்தன் மேல் அபாரமான பக்தியை கொண்டான்.

**கோ$^{3}$பாலரிருவல்லி தா போகி$^{3}$ ஸ்ரீஸத்ய**
**ஸ்ரீபன்ன பூஜிஸலாக$^{3}$ |**
**தாபரஹிதனாகி$^{3}$ தா படெ$^{3}$த$^{3}$னு ஸிரி**
**ஸுபுத்ர த$^{4}$ரெய வைபோ$^{4}$க$^{3}$ ||7**

உடனடியாக அந்த அரசன், அந்த கோபாலகர்கள் இருந்த இடத்திற்குச் சென்று, அவர்கள் மறுபடி செய்து வந்த ஸ்ரீஸத்ய நாராயண விரதத்தை, எவ்வித கோபமும் இன்றி, கண்டு, பிரசாதத்தைப் பெற்றுக் கொண்டான். அதன் பலனாக, அவன் இழந்திருந்த செல்வம், புத்திரர்கள், ஆட்சி ஆகிய அனைத்தையும் மறுபடி அவன் அடைந்தான்.

**யதிக$^{3}$ளெ நிமகீ$^{3}$க$^{3}$ ரதிபதி ஜனகன**
**வ்ரதத$^{3}$ மஹிமெ கதி$^{2}$ஸிதெ$^{3}$னு |**
**க்ஷிதியொளு இத$^{3}$னாரு ப்ரதிமாஸமாள்பரு**
**பதிதபாவனராகு$^{3}$வனு ||8**

முனிவர்களே, உங்களுக்கு இதுவரை ரதியின் கணவனான மன்மதனின் தந்தையான ஸ்ரீஸத்ய நாராயணனின் விரதத்தின் மகிமைகளை கூறினேன். பூமியில் இந்த விரதத்தை ஒவ்வொரு மாதமும் யார் செய்கிறார்களோ, அவர்கள் பகவந்தனின் அருளைப் பெறுவார்கள்.

**கடு$^{3}$ குருட$^{3}$கெ$^{3}$ கண்ணு ஜட$^{3}$ப$^{3}$தி$^{4}$ரகெ$^{3}$ கர்ண**
**த்$^{4}$ருடப$^{3}$ஞ்செகெ$^{3}$ ஸந்தானா |**
**ப$^{3}$ட$^{3}$வகெ$^{3}$ பா$^{4}$க்$^{3}$யவு ஸட$^{3}$க$^{3}$ரத$^{3}$லி கொட்டு**
**பி$^{3}$ட$^{3}$தெ$^{3}$ ரக்ஷிபனனுதி$^{3}$னா ||9**

குருடர்கள் கண் பார்வையை திரும்பப் பெறுவார்கள்; செவிடர்கள் கேட்பார்கள்; வாரிசு இல்லாதவர்களுக்கு மக்கட்செல்வம் உண்டாகும்; ஏழைக்கு செல்வம் கிடைக்கும்; பகவந்தன் அத்தகைய பக்தர்களுக்கு இவை அனைத்தையும் உடனடியாக கொடுத்து அவர்களை எப்போதும் காப்பான்.

**ஈ மஹா சரிதெய யாமயாமகெ நித்ய**
**நேவதி$^{3}$ படிஸுவரன்னு |**
**காமித ப$^{2}$லவித்து ப்ரேமதி$^{3}$ ஸலஹுவ**
**ஶ்யாமஸுந்தர ஸ்வாமி தானு ||10**

இந்த அற்புதமான ஸ்ரீஸத்ய நாராயண விரத கதையை, எப்போதும் பக்தியுடன் படிப்பவர்களுக்கு, அவர்கள் வேண்டியதை, அன்புடன் அருளி காப்பான் - ஸ்ரீஶ்யாமஸுந்தர ஸ்வாமி.

**ஜய ஸத்யதே$^{3}$வகெ$^{3}$ ஜய ஸத்யஶீலகெ$^{3}$**
**ஜய ஸத்யலோகேஶ பிதகெ$^{3}$ |**
**ஜய ஶ்ருதிவேத்$^{3}$யகெ$^{3}$ ஜய ஸ்ரீநிவாஸகெ$^{3}$**
**ஜய ஶ்யாம ஸுந்த$^{3}$ர தொ$^{4}$ரிகெ$^{3}$ ||11**

ஸ்ரீஸத்ய நாராயண ஸ்வாமிக்கு வெற்றி உண்டாகட்டும்; ஸ்ரீஸத்யஶீலனுக்கு வெற்றி உண்டாகட்டும்; ஸ்ரீஸத்யலோகத்தின் அதிபதியான பிரம்மனின் தந்தைக்கு, வேதங்களால்

புகழப்படுபவனுக்கு, ஸ்ரீநிவாஸனுக்கு, ஸ்ரீஶ்யாம ஸுந்தரனுக்கு வெற்றி உண்டாகட்டும்.

**|| இதி ஸ்ரீஸத்ய நாராயண கதா பஞ்சம அத்யாய: ||||**

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து ||**

******